අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

හින්දු ධර්මය I
இந்து சமயம் I
Hinduism I

42 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள்:**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

● **01** தொடக்கம் **05** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** ஏதோவொரு காரணத்தினால் ஏனையவற்றுடன் பொருந்தாது. **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**1.** (1) காமிகம் (2) காரணம் (3) வீரம் (4) குமாரதந்திரம் (5) மகுடம்

**2.** (1) நாசதீயசூக்தம் (2) யமசூக்தம் (3) வைதிகசூக்தம் (4) வர்ணசூக்தம் (5) புருஷசூக்தம்

**3.** (1) சாந்திபர்வம் (2) பாலகாண்டம் (3) துரோணபர்வம் (4) சுந்தரகாண்டம் (5) உற்பத்திகாண்டம்

**4.** (1) சீவகசிந்தாமணி (2) பெரியபுராணம் (3) திருத்தொண்டர் திருவந்தாதி (4) கம்பராமாயணம் (5) நால்வர் நான்மணிமாலை

**5.** (1) சங்கரபாஷ்யம் (2) சிவஞானபாடியம் (3) ஸ்ரீபாஷ்யம் (4) மத்துவபாடியம் (5) நீலகண்டபாடியம்

● **06** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** சோடிச் சொற்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ளவை ஒன்றுடன் ஒன்று பொருந்தவில்லை. **பொருந்தாத** அச்சோடிச் சொல்லைத் தெரிவுசெய்க.

**6.** (1) உமாபதி சிவாச்சாரியார் - உண்மை விளக்கம்
(2) மெய்கண்டதேவர் - சிவஞானபோதம்
(3) அருணந்தி சிவாச்சாரியார் - சிவஞானசித்தியார்
(4) வாகீச முனிவர் - ஞானாமிர்தம்
(5) திருக்கடவூர் உய்யவந்ததேவர் - திருக்களிற்றுப்படியார்

**7.** (1) மகேந்திரவர்மன் - திருச்சிராப்பள்ளி குகைக்கோயில்
(2) மாமல்லன் - மகிடாசுர மண்டபம்
(3) இராஜசிம்மன் - கைலாசநாத கோயில்
(4) நந்திவர்மன் - மதங்கேஸ்வரம்
(5) பரமேசுவரவர்மன் - முக்தீஸ்வரம்

**8.** (1) வசந்தம் - இளவேனில்
(2) கிரீட்மம் - முதுவேனில்
(3) ஏமந்தம் - கூதிர்காலம்
(4) வருஷ - மழைக்காலம்
(5) சரத் - இலையுதிர்காலம்

**9.** (1) கடையிற்சுவாமிகள் - யாழ்ப்பாணம் நீராவியடி
(2) சித்தானைக்குட்டி சுவாமிகள் - மட்டக்களப்பு காரைதீவு
(3) பெரியானைக்குட்டி சுவாமிகள் - கொழும்பு முகத்துவாரம்
(4) நவநாதசித்தர் - குயின்ஸ்பெரி தேயிலைத் தோட்டம்
(5) செல்லப்பா சுவாமிகள் - கொழும்புத்துறை

[பக். 2 ஐப் பார்க்க

10. (1) வாச்சியமராயன் - கூத்துக் கலைஞன்
(2) கோலாட்டக்கலை - பார்வதிதேவி
(3) பண்ணிசை - பஞ்சமரபு
(4) கொம்புமுறி - வசந்தன்கூத்து
(5) அம்மன் கரகம் - அரிசி



- 11 தொடக்கம் 15 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் 'அ', 'ஆ' என்னும் நிரல்களின் கீழ் சில விடயங்கள் தரப்பட்டுள்ளன. 'அ' நிரலுக்கு ஏற்ற விதத்தில் 'ஆ' நிரல் பொருத்தமாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

11.

| அ | ஆ |
|---|---|
| (i) கச்சியப்ப முனிவர் | A - ஞானசம்பந்தன் மாத இதழ் |
| (ii) தருமபுர ஆதீனம் | B - சிவஞானபாடியம் |
| (iii) நமசிவாய மூர்த்திகள் | C - திருவாவடுதுறை ஆதீனம் |
| (iv) சிருங்கேரி மடம் | D - ஆதிசங்கரர் |
| (v) சிவஞான முனிவர் | E - தணிகைப்புராணம் |

(1) BDCAE (2) CDBEA (3) EACBD (4) EACDB (5) EDABC

12.

| அ | ஆ |
|---|---|
| (i) சாங்கியம் | A - கௌதமர் |
| (ii) யோகம் | B - பாதராயணர் |
| (iii) நியாயம் | C - கபிலர் |
| (iv) வைசேடிகம் | D - பதஞ்சலி |
| (v) வேதாந்தம் | E - கணாதர் |

(1) BDEAC (2) BEACD (3) CDAEB (4) DBACE (5) EABDC

13.

| அ | ஆ |
|---|---|
| (i) கொடியேற்றம் | A - காத்தல் |
| (ii) வாகனத்திருவிழா | B - மறைத்தல் |
| (iii) தேர்த்திருவிழா | C - அழித்தல் |
| (iv) மௌனோற்சவம் | D - அருளல் |
| (v) தீர்த்தம் | E - படைத்தல் |

(1) ADECB (2) CDBEA (3) EACBD (4) EBACD (5) EDABC

14.

| அ | ஆ |
|---|---|
| (i) முகம் | A - சூரியரூபம் |
| (ii) கண் | B - பிரம்மரூபம் |
| (iii) வலப்பாகம் | C - விஷ்ணு |
| (iv) இடப்பாகம் | D - சிவரூபம் |
| (v) நாபி | E - சக்திரூபம் |

(1) ADCEB (2) BCDAE (3) CDAEB (4) CDBEA (5) EDCAB

15.

| அ | ஆ |
|---|---|
| (i) இயமம் | A - மூச்சைப் பயிற்றுவிக்கும் பயிற்சி |
| (ii) நியமம் | B - புலனடக்கம் |
| (iii) ஆசனம் | C - இருத்தல், உடலைத் தியானத்திற்கான வழியில் தயார்படுத்தல் |
| (iv) பிரணாயாமம் | D - தீய செயல்களைத் தவிர்த்தல் |
| (v) பிரத்தியாகாரம் | E - ஒழுக்க விதிகளைக் கடைப்பிடித்தல் |

(1) ADCEB (2) EBACD (3) EDABC (4) EDCAB (5) DECAB

[பக். 3 ஐப் பார்க்க

- **16** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் அதன் கீழே தரப்பட்டுள்ளவற்றுள் மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

**16.** கோயில் என்று சிறப்பாக அழைக்கப்படும் திருத்தலம்
(1) திரிபுவனேஸ்வரம் (2) சிதம்பரம் (3) தஞ்சைப் பெருங்கோயில்
(4) ஐராவதேஸ்வரம் (5) கங்கை கொண்ட சோழேஸ்வரம்

**17.** இந்து தத்துவ அளவைகளுள் **அடங்காதது**
(1) பிரத்தியட்சம் (2) அனுமானம் (3) பதார்த்தம்
(4) ஆப்தவாக்கியம் (5) உவமானம்

**18.** பகவத்கீதை கூறும் யோகங்களுள் **உள்ளடக்கப்படாதது**
(1) குண்டலினியோகம் (2) அர்ச்சுனவிஷாத யோகம் (3) ராஜயோகம்
(4) கர்மயோகம் (5) விபூதியோகம்

**19.** சைவசித்தாந்தத்தில் குறிப்பிடப்படும் ஆணவத்தின் குணங்களைக் கொண்ட தொகுதி
(1) கொலை, மதம், இருத்தல், கற்பம் (2) விகற்பம், கற்பம், குரோதம், மோகம்
(3) நகை, அஞர், விடுதல், கிடத்தல் (4) கற்பம், குரோதம், இயற்றல், மேவல்
(5) குரோதம், கொலை, நகை, விடுதல்

**20.** பஞ்சாங்கத்தின் ஐந்து உறுப்புகளைக் கொண்டமைந்த தொகுதி
(1) வாரம், நட்சத்திரம், கரணம், அத்தம், திதி
(2) திதி, யோகம், ரோகினி, நட்சத்திரம், கரணம்
(3) நட்சத்திரம், கரணம், மிருகசீருடம், திதி, யோகம்
(4) வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம்
(5) யோகம், வாரம், ரோகினி, அத்தம், திதி

**21.** அருணகிரிநாதரின் பாடல்கள் அடங்கிய தொகுதி
(1) கந்தரலங்காரம், மயில்விருத்தம், திருவிருத்தம், திருப்புகழ்
(2) திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, வேல்விருத்தம்
(3) கந்தரனுபூதி, கந்தர்கலிவெண்பா, சேவல்விருத்தம், வேல்விருத்தம்
(4) கந்தரந்தாதி, திருமொழி, கந்தரலங்காரம், திருப்புகழ்
(5) கந்தரலங்காரம், திருவிருத்தம், வேல்விருத்தம், சேவல்விருத்தம்

**22.** மேல்வருவனவற்றுள் இராமானுஜரின் வேதாந்தக் கொள்கை பற்றிய சரியான கூற்று
(1) இதனை தத்துவத்திரயக் கொள்கை என்றும் அழைப்பர்.
(2) ஆன்ம விடுதலைக்கு வாயுபகவான் அவசியம் என்கிறது.
(3) பிரசின்ன பௌத்தம் எனவும் அழைக்கப்படுகின்றது.
(4) கோட்பாட்டை நிறுவுவதற்குரிய பிரமாணமாக ஆறுவகைப் பிரமாணத்தை ஏற்றுக்கொள்கின்றது.
(5) ஈஸ்வரன் மட்டுமே உண்மைப் பொருள் எனக் குறிப்பிடுகிறது.

**23.** தஞ்சைப் பெருங்கோயில் ஓவியங்களைக் கொண்ட தொகுதி
(1) யோகதட்சிணாமூர்த்தி, திருக்கைலாயக் காட்சி, திரிபுராந்தகர், சோமாஸ்கந்தர்
(2) இராசராசனும் கருவூர்த்தேவரும், தடுத்தாட்கொண்ட வரலாறு, சோமாஸ்கந்தர், திரிபுராந்தகர்
(3) யோகதட்சிணாமூர்த்தி, தடுத்தாட்கொண்ட வரலாறு, திரிபுராந்தகர், திருக்கைலாயக் காட்சி
(4) திருக்கைலாயக் காட்சி, திரிபுராந்தகர், சோமாஸ்கந்தர், தட்சிணாமூர்த்தி
(5) இராசராசனும் கருவூர்த்தேவரும், யோகதட்சிணாமூர்த்தி, பைரவர், தடுத்தாட்கொண்ட வரலாறு

**24.** தர்மசாஸ்திரங்கள் கூறும் பஞ்சயக்ஞங்கள்
(1) பிரமயக்ஞம், கிருஷ்ணயக்ஞம், பிதிர்யக்ஞம், பூதயக்ஞம், மானிடயக்ஞம்
(2) தேவயக்ஞம், சூரியயக்ஞம், பூதயக்ஞம், மானிடயக்ஞம், பிதிர்யக்ஞம்
(3) பிதிர்யக்ஞம், பிரமயக்ஞம், ரிஷியக்ஞம், பூதயக்ஞம், தேவயக்ஞம்
(4) மானிடயக்ஞம், பிதிர்யக்ஞம், தேவயக்ஞம், சூரியயக்ஞம், பிரமயக்ஞம்
(5) பிரமயக்ஞம், தேவயக்ஞம், பிதிர்யக்ஞம், பூதயக்ஞம், மானிடயக்ஞம்

**25.** ஐந்து வகையான சிவராத்திரிகள்
(1) மாத சிவராத்திரி, வருட சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, யோக சிவராத்திரி, நித்திய சிவராத்திரி
(2) பட்ச சிவராத்திரி, திதி சிவராத்திரி, வருட சிவராத்திரி, மாத சிவராத்திரி, யோக சிவராத்திரி
(3) யோக சிவராத்திரி, ஞான சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, வருட சிவராத்திரி, மாத சிவராத்திரி
(4) நித்திய சிவராத்திரி, மாத சிவராத்திரி, மகா சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, யோக சிவராத்திரி
(5) மாத சிவராத்திரி, ஞான சிவராத்திரி, நித்திய சிவராத்திரி, மகா சிவராத்திரி, பட்ச சிவராத்திரி

[பக். 4 ஐப் பார்க்க

01825

**26.** கன்மத்தின் செயல்களைக் கொண்ட தொகுதி
(1) அஞர், இருத்தல், கிடத்தல், பரநிந்தை, மேவல்
(2) இருத்தல், கிடத்தல், விடுதல், இயற்றல், மேவல்
(3) இயற்றல், விடுதல், மோகம், கற்பம், இருத்தல்
(4) பரநிந்தை, இயற்றல், விகற்பம், குரோதம், மோகம்
(5) விடுதல், இயற்றல், பரநிந்தை, மேவல், நகை

**27.** ஞான மார்க்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ள தசகாரியச் செயற்பாடுகளாவன
(1) ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, தத்துவரூபம், சிவரூபம்
(2) ஆத்மலாபம், தத்துவதரிசனம், சிவபோகம், தத்துவசுத்தி
(3) ஆன்மதரிசனம், ஆன்மஞானம், சிவஞானம், சிவதரிசனம்
(4) தத்துவரூபம், தத்துவத்திரயம், சிவயோகம், சிவரூபம்
(5) ஆன்மசுத்தி, ஆன்மசுழுத்தி, சிவஞானம், சிவதரிசனம்

**28.** கடவுளை அடையும் வழிகளில் கர்மயோகம் என்பது தன்னலம் கருதாத
(1) யோக வழியாகும். (2) அன்பு வழியாகும். (3) அறிவு வழியாகும்.
(4) உழைப்பின் வழியாகும். (5) தியான வழியாகும்.

**29.** தைப்பொங்கல் பண்டிகை மூலம் வளர்க்கப்படும் நற்பண்புகள்
(1) அன்பு, அறம், அகிம்சை, செய்ந்நன்றி மறவாமை, பகுத்துண்ணல்
(2) இறைவழிபாடு, பெரியோரை மதித்தல், வாழ்த்துக் கூறுதல், மன்னிக்கும் பண்பு
(3) அன்பு, அகிம்சை, பகுத்துண்ணல், விருந்தோம்பல், வாழ்த்துக் கூறுதல்
(4) அகிம்சை, இகழ்தல், அன்பு, அறம், விருந்தோம்பல்
(5) அன்பு, அறம், அழுக்காறுடைமை, அகிம்சை, இறைவழிபாடு

**30.** இந்து மருத்துவம் முக்கியத்துவம் பெறக் காரணம்
(1) பாரம்பரிய மருத்துவமுறையாக விளங்குவது.
(2) ஆங்கில மருந்துகள் போல பக்கவிளைவுகளைக் கொண்டது.
(3) மேல்நாட்டு மருத்துவ முறையுடன் எவ்விதத்திலும் தொடர்புடையது அல்ல.
(4) அக்குபஞ்சர் வைத்திய முறையில் இருந்து முற்றிலும் வேறுபட்டது.
(5) ஆங்கில மருத்துவ முறைகளால் குணமாக்க இயலாத சிலவகை நோய்களையும் குணப்படுத்தும்.

- **31** தொடக்கம் **35** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**31.** **அதர்வ வேதம்**
(1) திரயீவித்யா என்ற சொற் பிரயோகத்தில் உள்ளடக்கப்படாத வேதமாகும்.
(2) கோபதப் பிராமணம் இவ் வேதத்திற்குரியதாகும்.
(3) இவ் வேதத்தில் அடங்கும் பரிகார நடைமுறைகள் பிரகார லட்சண விதிப்படலத்தில் இடம்பெற்றுள்ளன.
(4) இது 20 காண்டங்களையும் 731 சூக்தங்களையும் உடையது.
(5) இதன் பௌஷ்டியாணி மந்திரங்கள் பொருளாதார சுபீட்சத்தை நோக்கியவையாக அமைந்துள்ளன.

**32.** **உமாபதி சிவாச்சாரியார்**
(1) வடமொழியில் பௌஷ்கர ஆகமத்திற்கு வியாக்யானம் எழுதியவர்.
(2) மெய்கண்டதேவரின் நேரடி மாணாக்கருள் ஒருவராவார்.
(3) சிதம்பரத்தில் கொடிக்கவி பாடி கொடியேறச் செய்தவர்.
(4) சிதம்பரம் தில்லை வாழந்தணர் மரபில் பிறந்தவர்.
(5) குருவைத் தெய்வமாகப் போற்றும் பக்குவ நிலையை உணர்த்தியவர்.

**33.** **பொலனறுவைக் கோயில்களில் முதலாம் சிவாலயம்**
(1) இது 61' 9" நீளம் கொண்டது.
(2) தென்னிந்திய சிற்ப சாஸ்திர விதிக்கு ஏற்ப அமைந்துள்ளது.
(3) இது முற்றிலும் கற்றளியாக அமைந்த கோயிலாகும்.
(4) திராவிடக் கட்டடக்கலை மரபிற்குரியது.
(5) வேசரக் கட்டடக்கலைப் பாணியில் அமைந்துள்ளது.



**34.** **பெரியானைக்குட்டி சுவாமிகள்**
(1) சித்தானைக்குட்டி சுவாமிகளின் ஆத்மார்த்த சீடராக விளங்கியவர்.
(2) 19ஆம் நூற்றாண்டில் இந்தியா தமிழ்நாட்டில் அவதரித்தவர்.
(3) சேர். பொன். அருணாசலத்துடன் தொடர்பினை ஏற்படுத்திக் கொண்டவர்.
(4) கப்பம் வேண்டி பிறருக்குத் துன்பம் செய்தவனை நல்லவனாக மாற்றியவர்.
(5) சாதுக்களின் புகையிரத கட்டண அறவீட்டினை இல்லாமற் செய்தவர்.

[பக். 5 ஐப் பார்க்க

**35.** **வடமோடிக் கூத்திற்கான ஒப்பனைகள்**
(1) உடல் முழுவதும் வெள்ளை நிறப் பவுடர் பூசியிருப்பர்.
(2) காலில் சலங்கை கட்டி, கையில் ஏதாவது ஆயுதம் ஏந்தியிருப்பர்.
(3) கொடுக்குக் கட்டியிருப்பர்.
(4) ஆண்களுக்கு அரசமுடி அணிவர்.
(5) ஏற்கும் பாத்திரத்திற்கேற்ப ஒப்பனை அமையும்.

● மேல்வரும் பகுதியில் A - J வரையில் தரப்பட்டுள்ள சொற்களுள் இவ்விரண்டு சொற்கள் குறிப்பிட்டவொரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **36** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

| | | | | |
|---|---|---|---|---|
| A<br>சத்காரியக் கொள்கை | B<br>மீமாம்ச சூத்திரம் | C<br>உபநயம் | D<br>விவர்த்தவாதம் | E<br>ஔஷதி சூக்தம் |
| F<br>பிராமணம் | G<br>அவச்சேதம் | H<br>சல்லியக் கிரியை | I<br>சதசத்து | J<br>தந்திரம் |

**36.** வைதிகச் சடங்குகளுடன் தொடர்புடைய சோடி
(1) BF (2) CF (3) CI (4) EF (5) HJ

**37.** இந்து தத்துவப் புலத்தில் ஆன்மக் கொள்கையுடன் தொடர்புடைய சோடி
(1) AH (2) AI (3) DG (4) DI (5) GI

**38.** இந்து மருத்துவவியலுடன் தொடர்புடைய சோடி
(1) AE (2) CH (3) DG (4) EH (5) EJ

**39.** அளவைகளுடன் தொடர்புடைய சோடி
(1) AJ (2) BE (3) CJ (4) FJ (5) GJ

**40.** இந்து தத்துவக் கோட்பாடுகளில் பிரபஞ்சவியலுடன் தொடர்புடைய சோடி
(1) AD (2) AG (3) DG (4) EG (5) GI

● இந்து சமயக் கட்டடக்கலை மற்றும் ஆதிசங்கரர் பற்றிய கருத்தியல்கள் சில கீழே தரப்பட்டுள்ளன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு **41** தொடக்கம் **45** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**குப்தர்காலக் கோயிற் கட்டடக்கலை**

A - கருங்கற் படைகளால் அமையப் பெற்ற சாஞ்சி 17ஆவது கோயில் தோற்றத்தில் குடைதளியினை ஒத்தது; ஆயினும் இது கட்டுத்தளிக் கோயிலேயாகும்.

B - குப்தர்காலக் கட்டடக்கலை வரலாற்றில் கி.பி. 6ஆம் நூற்றாண்டளவில் சிகரங்களுடன் கூடிய கோயில்களை அமைக்கும் முறை ஆரம்பமாகியது.

C - சதுரமான கருவறையுடன் சிகரத்துடனன்றித் தட்டையான மேற்கூரையமைப்பினையுடையதாக உதயகிரிக் குகைக்கோயில் திகழ்கிறது.

D - குடைதளிகளே குப்தர்காலக் கட்டடக்கலை வரலாற்றின் தோற்றுவாயாக அடையாளப்படுத்தப்படுகின்றன. இவற்றைக் குகைக்கோயில்கள் எனவும் வழங்குவர்.

E - குப்தர்காலக் கட்டுத்தளிகள் செங்கல் மற்றும் கருங்கற்களைக் கொண்டு நிருமாணிக்கப்பட்டன. இவை குடைதளிகளிலிருந்து வளர்ச்சி பெற்ற அமைப்புகளாகும்.

F - தியோகர் தசாவதாரக் கோயிலின் வாயிற்புறச் சுவரின் இருபுறமும் கங்கை, யமுனைச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. பட்டாரி மகாதேவன் கோயிலைப் போல இதுவும் சிகரத்துடன் அமையப்பெற்ற ஆலயமாகும்.

**41.** குப்தர்காலக் கட்டடக்கலை வரலாற்றின் தொடக்க நிலை பற்றிய தகவல்களுடன் தொடர்புடைய சோடி
(1) BE (2) BF (3) DE (4) DF (5) EF

**42.** குப்தர்காலத்தில் அமைக்கப்பட்ட கட்டுத்தளிகள் பற்றிய விபரங்களுடன் தொடர்புடைய சோடி
(1) AC (2) AD (3) AE (4) CE (5) EF

**43.** பட்டாரி மகாதேவன் கோயில் பற்றிய தகவல்களுடன் தொடர்புடைய சோடி
(1) AF (2) BF (3) CD (4) CE (5) DE

[பக். 6 ஐப் பார்க்க

**ஆதிசங்கரர்**

A - ஆதிசங்கரர் 'சண்மதப்பிரதிஸ்தாபகர்' எனச் சிறப்பிக்கப்படுகிறார்.
B - பிரமசூத்திரமும் மாண்டுக்கியகாரிகையும் இவரின் அத்வைத சிந்தனைக்கு அடிப்படையாக அமைந்தன.
C - இவர் ஏகான்மவாதத்தின் அடிப்படைகளை உபநிடத மகாவாக்கியங்களிலிருந்து பெற்றுக் கொண்டார்.
D - சுப்பிரமணிய புஜங்கம், கனகதாராஸ்தோத்திரம் முதலிய நூல்கள் இவரால் இயற்றப்பட்டன.

**44.** ஆதிசங்கரரை ஒரு தத்துவவாதியாக இனங்காட்டும் கூற்றுகள் அடங்கிய சோடி
(1) AC (2) AD (3) BC (4) BD (5) CD

**45.** ஆதிசங்கரரின் சமயப் பணிகளை விளக்கும் கூற்றுகள் அடங்கிய சோடி
(1) AB (2) AC (3) AD (4) BC (5) BD

● **46** தொடக்கம் **50** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் தலைப்புக்கு மிகப்பொருத்தமானதைத் தெரிவுசெய்க.

**46.** **சிந்துவெளி நாகரிகம்**
(1) 19ஆம் நூற்றாண்டில் சேர். ஜோன் மார்ஷல் தலைமையிலான புதைபொருள் ஆய்வுக்குழுவால் அகழ்வாய்வு மேற்கொள்ளப்பட்டது.
(2) சிந்துவெளி மக்கள் பலியிடுதலில் நம்பிக்கையற்றவர்களாக விளங்கினர்.
(3) மொகஞ்சதாரோ பிரதேசமானது தற்போது பாகிஸ்தானில் உள்ளது.
(4) சிந்துவெளி என்ற சொல் பெரிய இடுகாட்டுமேடு எனப் பொருள்படும்.
(5) சிந்துவெளியில் கிடைத்த சுடுமண் பாவை உருவங்கள் விஷ்ணு வழிபாட்டின் தொன்மைக்குச் சான்று பகர்கின்றன.

**47.** **இந்து இலக்கியங்களில் அறம்**
(1) சாந்தோக்கிய உபநிடதத்தில் 'சத்தியம்வத', 'தர்மம்சர' எனும் அற உபதேசங்கள் உள்ளன.
(2) இராமாயணத்தில் "தர்மத்தை நிலைநிறுத்த யுகங்கள் தோறும் அவதரிக்கின்றேன்" எனும் கிருஷ்ணரின் கூற்று இடம்பெற்றுள்ளது.
(3) ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம் எனத் தொடரும் பல்வேறு அறக்கருத்துக்கள் சிவப்பிரகாசத்தில் இடம்பெற்றுள்ளன.
(4) "யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை" என்ற வாசகம் பெரியபுராணத்தில் உள்ளது.
(5) மனுஸ்மிருதி "ஆசாரமே மேலான தர்மம்" எனக் குறிப்பிடுகிறது.

**48.** **திருமூலரும் திருமந்திரமும்**
(1) திருமந்திரத்திலேயே சைவம் என்ற சொல் முதன்முதலில் பயின்று வந்தது.
(2) திருமூலர் தர்மபுர ஆதினத்தைத் தோற்றுவித்தவர்.
(3) இவர் நவநாதச் சித்தர் மரபுடன் தொடர்புடையவராகக் கருதப்படுகிறார்.
(4) 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற வாசகம் திருமந்திரத்திலேயே இடம்பெற்றுள்ளது.
(5) இது இந்துசமய மரபில் வடமொழிச் செல்வாக்கை நிராகரித்துத் தனித் தமிழ் நோக்கில் இயற்றப்பட்ட பனுவலாகும்.

**49.** **சேர். பொன். இராமநாதன்**
(1) சைவ பரிபாலன சபையின் நோக்கத்துக்கு அமைவாக யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியை ஆரம்பித்து நடத்தினார்.
(2) 'இந்து சாதனம்' என்ற பத்திரிகையை வெளியிடுவதில் முன்னின்று உழைத்தவர்.
(3) செந்தமிழ் இலக்கணம் என்னும் நூலை இயற்றினார்.
(4) திருக்கேதீச்சரக் காணியை அரசிடமிருந்து பெறுவதில் பெரும் பங்காற்றியவர்.
(5) இந்து வாலிபர் சமாசத்தினை உருவாக்கப் பாடுபட்டவர்.

**50.** **சிவாகமங்கள்**
(1) திருவுருவங்களை செதுக்குவதற்குரிய கருங்கல்லைத் தெரிவுசெய்தல் பற்றி தாருபரீக்ஷணம் என்ற தலைப்பில் கூறுகின்றன.
(2) சிவாகமங்களின் கிரியாபாதம் பவித்திரவிதி பற்றிக் குறிப்பிடுகின்றது.
(3) கொடியேற்ற நிகழ்வில் மஞ்சட்கயிறானது சைவசித்தாந்தப் பொருண்மையில் பசுவைச் சுட்டி நிற்கின்றது.
(4) சிவாகமங்களின் பிரதிமாலட்சணவிதிப் படலத்தில் அணிமா முதலிய அட்டமாசித்திகள் பற்றி விளக்கப்பட்டுள்ளது.
(5) கொடியேற்றத்திற்கு முன் நடைபெறும் கிரியைகளில் பேரிதாடனம், படைத்தற் தொழிலைச் சுட்டுகிறது.

* * *

1825

AL/2017/42/T-II





අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

හින්දු ධර්මය II
இந்து சமயம் II
Hinduism II

42 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள்:**

※ **பகுதி I** இல் **இரண்டு** வினாக்களையும், **பகுதி II** இல் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I

**1.** "பக்திநெறியை மேம்படுத்துவதில் நாயன்மார்களதும் ஆழ்வார்களதும் பங்களிப்பு அளப்பரியது." இதனை அடிப்படையாகக் கொண்டு மேல்வருவனவற்றை விளக்குக.
(அ) காரைக்காலம்மையாரின் பக்தி நிலை
(ஆ) சைவ, வைணவ பக்திநெறி வளர்ச்சிக்கு அரசர்களின் பங்களிப்பு
(இ) நாயன்மார் பனுவல்களில் காணப்படும் பக்திநெறியின் சிறப்பியல்புகள்
(ஈ) வைணவ பக்திநெறி வளர்ச்சிக்கு ஆழ்வார்களின் பங்களிப்பு

**2.** "புராணங்கள் இந்துசமயக் கருவூலம்." இக்கூற்றினை மேல்வரும் தலைப்புகளில் ஆராய்க.
(அ) புராணங்களில் இந்துசமய நெறிகள்
(ஆ) புராணங்கள் கூறும் இந்துசமயக் கலை மரபுகள்
(இ) புராணங்கள் புலப்படுத்தும் இந்துசமய விழுமியங்கள்
(ஈ) கந்தபுராண கலாசாரம்

**3.** "இந்து சமய தத்துவ சிந்தனைகளுக்கு உபநிடதங்கள் மூல ஊற்றுக்களாக விளங்குகின்றன." இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலனை செய்க.
(அ) உபநிடதம் என்ற சொல்லின் பொருள்
(ஆ) உபநிடதங்களில் பிரமமும் ஆன்மாவும்
(இ) உபநிடதங்களில் பிரபஞ்சம்
(ஈ) உபநிடதங்களில் கன்மமும் மறுபிறப்பும்

## பகுதி II

**4.** "வேதாந்த தத்துவ வளர்ச்சியில் மத்துவ வேதாந்தம் தனித்துவம் மிக்கது." இக்கூற்றை அடிப்படையாகக் கொண்டு மேல்வருவனவற்றை விளக்குக.
(அ) துவைதம் என்பதன் பொருள் விளக்கம்
(ஆ) மத்துவர் கூறும் ஐவகைப் பேதங்கள்
(இ) மத்துவ வேதாந்தத்தில் விடுதலை
(ஈ) விசிட்டாத்வைதமும் துவைதமும்

**5.** "சைவசித்தாந்தத்தில் மாயை ஓர் உள்பொருளாகும்" என்ற சைவசித்தாந்தக் கொள்கையை மேல்வரும் தலைப்புகளில் பரிசீலிக்குக.
(அ) மாயை என்பதன் விளக்கம்
(ஆ) மாயையின் இயல்புகள்
(இ) சுத்தமாயை
(ஈ) பிரகிருதிமாயை

**6.** இலங்கையில் இந்துசமய வளர்ச்சிக்கு சுவாமி விபுலாநந்தர் ஆற்றிய பங்களிப்புகளை ஆராய்க.

[பக். 2 ஐப் பார்க்க

7. "அரும்பெறல் மரபில் பெரும் பெயர் முருக" என்ற கூற்றினை அடிப்படையாகக் கொண்டு மேல்வருவனவற்றை விளக்குக.

(அ) கௌமார நெறியின் தொன்மை

(ஆ) முருக விரதங்கள்

(இ) முருக வழிபாட்டு முறைகள்

(ஈ) ஆறுபடை வீடுகள்



8. மேல்வருவனவற்றுள் எவையேனும் **நான்கினுக்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(அ) பிரகிருதி

(ஆ) வராகமிகிரர்

(இ) கண்ணகி வழிபாடு

(ஈ) குளக்கோட்ட மன்னனின் இந்துசமயப் பணிகள்

(உ) வைகுண்ட ஏகாதசி விரதம்

(ஊ) நகுலேஸ்வரம்

***